டுணர்த்துகின்றார்.

இ-ள்: எச்சவும்மை நின்றவழி எஞ்சு பொருட்கிளவியாம் எதிர்மறையும்மைத் தொடர் வந்து தம்முண் மயங்குத லில:

எ-று.

சாத்தனும் வந்தான்

கொற்றனும் வர லுரியன் எனின் இயை யாமை

கண்டுகொள்க.

ஏனையும்மையொடு மயங்குதல் விலக்காராயிற் றென்னை யெனின்: அவை எஞ்சுபொருட் கிளவியவாய் வாராமையி னென்பது. (௩௫)

யியல்]

சொல்லதிகாரம்

க்கிரம்

உ௮௪. எஞ்சுபொருட்

கிளவி செஞ்சொ லாயிற்

பிற்படக் கிளவார் முற்படக்

இ - ள்:

எச்சவும்மையாற் றழுவப்படும்
எஞ்சு பொருட்
கிளவி உம்மையில்
சொல்லாயின், அவ்வும்மையில்
சொல்லை அவ்
வும்மைத் தொடர்க்குப் பின்
சொல்லாது முன் சொல்லுக; எ
- று.

எ - டு: சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான் என வரும். கொற்றனும் வந்தான் சாத்தன் வந்தான் எனப் பிற்படக் கிளப்பின், முற்கூறியதனை

விலக்குவதுபோன்று பொருள்
கொள்ளாமை கண்டுகொள்க.

'அடகுபுலால் பாகு பாளிதமு மூண்ணான்
கடல்போலுங் கல்வி யவன்'

என்பது மது.

உம்மையடாதே தானே
நிற்றலிற் செஞ்சொ லென்றார்.

செஞ்சொலாயின் முற்படக் கிளக்க வெனவே, எஞ்சு பொருட்கிளவி உம்மையொடு வரிற் பிற்படக் கிளக்க வென்றவாறும். (௩௪)

முற்றும்மை

ம எச்ச மாதல்

௨௮௫. முற்றிய வும்மைத்
தொகைச்சொன் மருங்கி
னெச்சக் கிளவி

யுரித்து மாகும்.

இ - ள்: முற்றும்மை யடுத்து நின்ற தொகைச்சொல்லிடத்து எச்சச்சொல் லுரித்து மாம்; எ - று.

எ - டு: பத்துங்கொடால், அனைத்துங்கொடால் என்புழி முற்றும்மை தம்பொருளுணர்த்தாது சிலவெஞ்சக் கொடு வென்னும் பொருள் தோன்றி நின்றவாறு கண்டுகொள்க.

முற்றுதலென்னும் பொருளது பண்பு முற்றியவும்மையென ஒற்றுமை நயத்தாற் சொன்மே லேறி நின்றது.

உரித்துமாகு மெனவே, எச்சப் பொருண்மை குறியாது நிற்றலே பெரும்பான்மை யென்பதாம்.

எற்புழிக்கோட லென்பதனன் எச்சப்படுவது எதிர்மறை வினைக்க ணென்று கொள்க. பத்துங்கொடு என்பது பிறவுங் கொடுவென்பதுபட நிற்றலின், விதிவினைக்கண்ணும் எச்சங் குறிக்கு மென்பாரு முளர். இப்பொழுது பத்துங்கொடு என்பது கருத்தாயின், இப்பொழுது பத்துக்கொடு என உம்மை யின்றியும் பொருள் பெறப்படும்; பத்துங்கொடு பிறவுங்கொடு என்பது கருத் தாயின், இஃதெச்சவும்மையாகலின் ஈண்டைக் கெய்தாது; அதனன் அது பொருத்தமின் றென்க.

இவை மூன்று சூத்திரத்தானும் வழுவற்க வென இடைச்சொற்பற்றி மரபுவழுக் காத்தவாறு. (உஎ)

கள்ㄖ

தொல்காப்பியம்

'ஏ' என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

உஅசு. ஈற்று நின் றிசைக்கு
மேயெ னிறுதி
கூற்றுவயி னோரள
பாகலு முரித்தே.

இ - ள் : செய்யு ளிறுதிக்கண் நின்றிசைக்கும் ஈற்றசை யே காரங் கூற்றிடத்து ஒரு மாத்திரைத் தாகலு முரித்து; எ - று.

எ - டு : 'கடல்போற் றோன்றல காடிறந் தோரே' (அகம்-க.) என்புழி ஓரளபாயினவாறு கண்டுகொள்க.

தேற்றமுதலாயின நீக்கி ஈற்றசையே தழுவுதற்கு ஈற்று நின்றிசைக்கு மென்றார். செய்யுளிடை நிற்பதனை நீக்குதற்கு ஈற்று நின்றிசைக்கு மென்றே யொழியாது இறுதி யென்றார். மேனின்ற செய்யுளுறுப்போடு பொருந்தக் கூறுதற்க ணென்பார் கூற்றுவயி னென்றார்.

உம்மை எதிர்மறை. (உஅ)

# உ. எண்ணிடைச் சொற்கள்

எண்ணில் வரும்

'உம்' 'என்' என்பன

உஅள. உம்மை யெண்ணு

மெனவெ னெண்ணுந்
தம்வயிற் றொகுதி

கடப்பா டிலவே.

இ - ள்: உம்மையான் வருமெண்ணும், எனவான் வருமெண்ணும், இறுதிக்கட் டொகை பெறுதலைக் கடப்பாடாக வுடைய வல்ல என்றவாறு. எனவே, தொகை பெற்றும் பெறுதும் வருமென்பதாம்.

எ - டு:

'உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின' (சொல்-கசும.)

எனவும், 'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி' (சொல்-உகஎ.) எனவும், 'நிலனென நீரெனத் தீயென வளியென நான்கும்' எனவும், 'உயிரென வுடலென வின்றி யமையா' எனவும் அவ்விருவகை யெண்ணுந் தொகை பெற்றும் பெறாதும் வந்தவாறு.

தொகையெனப் பொதுப்படக் கூறிய வதனான், எண்ணுப் பெயரேயன்றி அனைத்தும் எல்லா மென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க. (கசு)

எண்ணில் வரும் 'ஏ' என்பது

உ அஅ. என்னே கார மிடையிட்டுக் கொளினு
மெண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.

இ - ள்: சொற்றொறும் வாராது என்னேகாரம் இடையிட்டு வரினும் எண்ணுதற் பொருட்டாம்; எ - று.

எ - டு: 'மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்' எனவும்,

யியல்]
சொல்லதிகாரம்
க்ள்க்

தோற்ற மிசையே

நாற்றஞ் சுவையே

யுறலோ டாங்கைம் புலனென மொழிப

,

எனவும் வரும்.

எண்ணுக் குறித்து வருவன எண்ணப்படும் பெயரெல்லாவற்றோடும் வருதல் மரபாயினும், இடையிட்டு வரினும் அமைக வென அமைத்தவாறு.

எனவும் என்றும் சொற்றொறும் வாராது ஒருவழி நின்றும் எண்ணுக் குறிக்குமாலெனின் :—அவை ஒருவழி நின்று எல்லாவற்றோடும் ஒன்றுதலின் ஆண்டாராய்ச்சி யில்லை யென்க.

பிறவெண் ஓடா நின்றவழி ஏகாரவெண் இடை வந்ததாயினும், ஓடா நின்ற பிறவெண்ணேயாமென உரைத்தாரால் உரையாசிரியரெனின் ;—அவ்வாறு விரா யெண்ணியவழிப் பிறவெண்ணுற் பெயர் கொடுப்பின் அதனை ஏகாரவெண்ணென்பாரையும் விலக்காமையானும், பிறவெண்ணு மென்றதனுற் பெறப்படுவதோர் பயனின்மையானும், அவர்க்கது கருத்தன் றென்க. (சுய)

'என' 'என்று' எ

ன்றுஞ் சொற்கள்

உஅஈ. உம்மை தொக்க
வெனுவென் கிளவியு
மாவி ருகிய
வென்றென் கிளவியு
மாயிரு கிளவியு
மெண்ணுவழிப் பட்டன.

இ - ள் : உம்மை
தொக்குநின்ற எனுவென்னு
மிடைச்சொல் லும்
என்ருவென்னு
மிடைச்சொல்லும்
இரண்டும் எண்ணு மிடத்து
வரும்; எ - று.

எ - டு : நிலனெனா நீரெனா
எனவும் நிலனென்று நீரென்று
எனவும்

வரும்.

உம்மைதொக்க வெனாவென்கிளவி யெனவே, எனாவுமென் அச்சொல் உம்மோடு வருதலுமுடைத்தென்பதாம். உம்மோடு வந்தவழி அவ்வெண்ணும்மை எண்ணு ளடங்கும்.

எண்ணுவழிப்பட்டன வெனவே, அவை சொற்றோறும் வருதலேயன்றி இடையிட்டும் வருமென்பதாம். 'பின்சா ரயல்புடை தேவகை யெனா' (சொல்- அஉ.) எனவும், 'ஒப்பிற் புகழிற் பழியி னென்று' எனவும் இடையிட்டு வந்தவாறு. இவை எண்ணுதற்கண் வாராமையானும், 'அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்' (சொல்- உகூ.) எனச் சூத்திரஞ் சுருங்குதற்சிறப்பினானும், அவற்றினை ஈண்டு வைத்தார். (சக)

*தொகை பெற்றே முடியும் எண்ணிடைச் சொற்கள்*

உகூo. அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்

பெயர்க்குறி மரபிற்
செவ்வெ ணிறுதியு

மேயி னாகிய
வெண்ணி னிறுதியும்

யாவயின் வரினுந்
தொகையின் றியலா.

இ - ள் : மேற்சொல்லப்பட்ட எனு என்று என்பனவற்றான் வரும் எண்ணி னிறுதியும், இடைச்சொல்லா னன்றிப் பெயரா

கஎ௨
தொல்காப்பியம்
[இடை

னெண்ணப்படுஞ் செவ்வெ
ணிறுதியும், ஏகாரத்தான்
வரும்
எண்ணினிறுதியும், யாதானுமோ ரிடத்து வரினுந் தொகையின்றி நில்லா; எ - று.

எ-டு: நிலனெனு நீரெனு விரண்டும் எனவும், நிலனென்று நீரென்று விரண்டும் எனவும், நிலநீரென விரண்டும் எனவும், நிலனே நீரேயென விரண்டும் எனவும் தொகை பெற்று வந்தவாறு.

செவ்வெண் இடைச்சொல்லெண் ணன்றென்றாராயினும், எண்ணுதலுந் தொகை பெறுதலுமாகிய ஒப்புமையான் ஈண்டுக் கூறினர். (சஉ)

என்ணில் வரும் உம்முக்கு, மேலும் ஒரு முடிபு

## உகூக. உம்மை யெண்ணி னுருபு தொகல் வரையார்.

இ-ள்: உம்மை யெண்ணின்கண் உருபு தொகுதல் வரையப் படாது; எ-று.

'பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலு
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப'

(சொல்-க0ச.)

என்னும் பொதுவிதியான் உம்மையெண்ணின்கண் உருபு தொகல் பெறப்பட்டமையால், பெற்றதன் பெயர்த்துரை நியமப்பொருட்டாகலான் உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையப்படாது; ஏனையெண்ணின்கண் அவை வரையப்படுமென நியமித்தல் இதற்குப் பயனாகக் கொள்க.

'குன்றி கோபங் கொடிவிடு பவள

மொண்செங்

காந்த ளொக்கு நின்னிறம்'

எனப் பிறவெண்ணின்கண் உருபு தொக்கதாலெனின்:—அற்றன்று: செவ் வெண் தொகையின்றி நில்லாமையின் அவற்றையென ஒரு சொல் விரிக்கப் படும்; விரிக்கவே, குன்றி முதலாயின எழுவாயாய் நின்றனவா மென்பது.

எ - டு:

'பாட்டுங் கோட்டியு

மறியாப் பயமி

றேக்கு மரம்போ னீடிய

வொருவன்.'

'இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றி' (சொல்-உகள.) என உம்மை யெண்ணின்கண் உருபு தொக்கவாறு கண்டுகொள்க.

வரையா றென்றதனன், ஆண்டும் எல்லாவுருபுந் தொகா;ஐயுங் கண்ணுமே தொகுவனவெனக் கொள்க.

யானை தேர் குதிரை காலா ளெறிந்தார் என உம்மையும் உருபும் உடன் றொக்கவழி, உம்மைத் தொகை யென்றது உருபுதொகை யென்க வென்பது இச்சூத்திரத்திற்குக் கருத்தாக உரைத்தாரால் உரையாசிரியரெனின்:— அஃது உம்மைத் தொகையாதலின் ஒருசொன் னடைத்தாய் உருபேற்றானும் பயனிலை கொண்டானும் நிற்கும்; அத்தொகையிடை உருபின்மை, சிற்றறிவி னோர்க்கும் புலனாம்; அதனான் அஃதவர்க்குக் கருத்தன்மை சொல்லவேண் டுமோ வென்பது. ()

யியல்]

சொல்லதிகாரம்

கஎ௫

க. புறனடை

'உம்' 'உந்து' ஆதல்

உ௬௨, உம்முந் தாகு

மிடனுமா ருண்டே.

இ - ள்: வினைசெயன் மருங்கிற் காலமொடு வருவனவற்றுள் உம்மீறு உந்தாய்த் திரிதலு முடைத்து; எ - று.

எ - டு: 'நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து' (புறம்-௯௪௫.) எனவும், 'நாரரி நறவிறுண் மகிழ்துங் குந்து' எனவும் வரும்.

வினைசெய்யன்மருங்கிற் காலமொடு வரும் உம்மென்பது எற்புழிக்கோட லென்பதனாற் பெற்றாம்.

இடனுமாருண்டேயென்றது, இத்திரிபு பெயரெச்சத்திற் கேருயவழி யென்பது கருதிப்போலும்.

தம்மீறு திரிதன் முதலாயின இவ்வோத்தினுட் கூறப்படும் இடைச் சொற்கே யென்பது இதனானும் பெற்றாம். வினையியலுள்ளுங் கூறப்படுமாயி னும், இடைச்சொற் றிரிபாகலான் ஈண்டுக் கூறலும் இயைபுடைத் தென்பது. (௬௫)

எண்ணிடைச் சொற்கள் வினைச்சொற்களினும் வருதல்

உ௬௩. வினையொடு நிலையினு மெண்ணு நிலை திரியா
நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே.

இ - ள்: வினையொடு நிற்பினும் எண்ணிடைச் சொற்கள் தந்நிலையிற் றிரியா; அவற்றொடு வருங்கால் அவற்றவற்றியல்பு ஆராய்தல்வேண்டும்; எ - று.

எ - டு: உண்டுந் தின்றும் பாடியும் வந்தான் எனவும், உண்ணவெனத் தின்னவெனப் பாடவென வந்தான் எனவும் வரும்.

ஒழிந்தவெண்ணொடு வருவனவுளவேற் கண்டுகொள்க.

பெரும்பான்மையும் பெயரோடல்லது எண்ணிடைச்சொல் நில்லாமையின் அதனை முற்கூறி, சிறுபான்மை வினையொடு நிற்றலு முடைமையான் இதனை ஈண்டுக் கூறினார்.

நினையல் வேண்டு மவற்றவற்றியல்பே யென்றதனான், எண்ணிடைச் சொல் முற்றுச்சொல்லும் பெயரெச்சமும் பற்றி வாரா தென்பதூஉம், வினை யெச்சத்தோடும் எற்பன வல்லது வாராவென்பதூஉம், ஆண்டுத் தொகை பெறுதல் சிறுபான்மை யென்பதூஉங் கொள்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்தது எனச் செவ்வெண் தொகை பெற்று வந்ததென்றாரால் உரையாசிரியரெனின்:—அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்துமாறுதலின் எண்ணப்படாமையானும், மூவருமென்பது சாத்தன் முதலாயினோர் தொகையாகலானும், அது போலியுரையென்க. (௪௬)

## எண்ணிடைச் சொற்கள் பிரிந்து சென்று ஒன்றுதல்

௨௯௪. என்று மெனவு
மொடுவுந் தோன்றி
யொன்றுவழி யுடைய
வெண்ணினுட் பிரிந்தே.

இ - ள்: என்றும் எனவும் ஒடுவும் என்பன ஒருவழித் தோன்றி எண்ணினுட் பிறவழியும் பிரிந்து சென்று ஒன்று மிட முடைய; எ - று.

எ - டு: 'வினைபகை யென்றிரண்டி னெச்சம்' (குறள் - ௬௭௪.) எனவும், கண்ணிமை நொடியென' (நன்மரபு-எ.) எனவும், 'பொருள் கருவி காலம் வினையிடனொடைந்தும்' (குறள்-௬௭௫.) எனவும், அவை ஒருவழி நின்று, வினையென்று, பகையென்று எனவும், கண்ணிமையென நொடியென எனவும், பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடத்தொடு எனவும் நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழிச் சென்று ஒன்றியவாறு கண்டு கொள்க.

ஒன்றுவழியுடைய வென்றதனால், சொற்றொறு நிற்பதே பெரும் பான்மை யென்பதாம். சொற்றொறு நின்றவெண் இக்காலத்தரிய. ஒடுவென் பதோ ரிடைச்சொல் எண்ணின்கண் வருத லிதனாற் கொள்க.

இவை மூன்றும் பொருளிற்பிரிந்து எண்ணின்கண் அசையாய் வருதலு டைய வென்பது உரையாசிரியர்க்குக் கருத்தென்பாரு முளர். அசைநிலையென் பது இச்சூத்திரத்தாற் பெறப்படாமையானும், 'கண்ணிமை நொடி' என்னுஞ் சூத்திரத்து எனவைக் கண்ணிமையென்பதனோடுங் கூட்டுகவென் றுரைத்த லானும், அவர்க்கது கருத்தன்றென்க.

இடைச் சொற்களின் பொருளறியுமாறு

# உகூ௫. அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென மெய்பெறக் கிளந்த வியல வாயினும்

வினையொடும் பெயரொடு நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே.

இ - ள்: மேற்கூறப்பட்ட இடைச்சொற்கள், அவ்வச்சொல் விற்கு அவையவை பொருளென நிலைபெறச் சொல்லப்பட்ட இயல்பையுடையனவாயினும், வினையொடும் பெயரொடும் ஆராய்ந்து உணரத் தோன்றி வேறு பொருளவாயும் அசைநிலையாயுந் திரிந்துவரினும், ஆராய்ந்து கொள்க; எ-று.

எனவே, கூறிய முறையான் வருதல் பெரும்பான்மையென்றும், பட வருதல் சிறுபான்மையென்றுஞ் சொல்லியவாறும்.

வேறு

வினையொடும் பெயரொடு மென்றது,
றுணர்தற்குச் சார்பு கூறியவாறு.

அவை வேறுபொருள வென்

எ - டு: 'சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரோ' (அகம்.சகூ.) எனவும், 'கலக்கொண்டேன் கள்ளென்கோ காழ்கொற்றன் குடென்கோ' எனவும் ஓகா

யியல்]
சொல்லதிகாரம்
கஎரு

ரம் ஈற்றசையாயும் எண்ணும் வந்தது. 'ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே' (அகம்-உஎகூ.) என மா முன்னிலை யசைச் சொல்லாயிற்று. 'அதுமற் கொண்கன் றேரே' என மன் அசைநிலை யாயிற்று. பிறவுமன்ன.

செய்யுளின்ப ரோக்கி வினையொடும் பெயரொடு மென்றார். (சஎ)

## இவ்வியலுக்குப் புறனடை

**உகூச. கிளந்த வல்ல
வேறுபிற தோன்றினுங்**

**கிளந்தவற் றியலா
னுணர்ந்தனர் கொளலே.**

இ - ள்: மேற்சொல்லப்பட்டனவன்றி யவை போல்வன பிற வரினும், அவற்றைக் கிளந்த சொல்லி னியல்பா னுணர்ந்து கொள்க; எ-று.

கிளர்ந்தவற்றியலா னென்றது, ஆசிரியர் ஆணையானன்றிக் கிளர்ந்தவற்றை யும் இன்னவென் றறிவது வழக்கினுட் சார்பும் இடமுங் குறிப்பும் பற்றி யன்றே; கிளவாதவற்றையும் அவ்வாறு சார்பும் இடமுங் குறிப்பும்பற்றி இஃதசைநிலை இஃதிசைநிறை • இது குறிப்பால் இன்னபொரு ளுணர்த்தும் என் றுணர்ந்துகொள்க வென்றவாறு.

எ - டு: 'சிறிதுதவிர்க் தீக மாளநின் பரிசிலருய்ம்மார்' எனவும், சொல் லென் றெய்ய நின்னொடு பெயர்ந்தே' எனவும், 'அறிவார் யாரஃ திறுவுழி யிறுகென' எனவும், 'பணியுமா மென்றும் பெருமை' (குறள்-கஎஅ.) எனவும், 'ஈங்கா குநவா லென்றிசின் யானே' (நற்றிணை-ருகு.) எனவும், மாள, தெய்ய, என, ஆம், ஆல் என்பனவும் அசைநிலையாய் வந்தன. 'குன் றுதொ றாடலு நின்றதன் பண்பே' (திருமுருகா-உகஎ.) எனத் தொறுவென்பது தான் சார்ந்த மொழிப்பொருட்குப் பன்மையும் இடமாதலு முணர்த்தி நிற்கும். ஆனம், ஏனம், ஓனம் என்பன எழுத்துச்சாரியை. பிறவும் எடுத்தோதாத விடைச் சொலெல்லாம் இப்புறனடையாற் றழீஇக் கொள்க. (சஅ)

## இடையியல் முற்றிற்று.

## அ. உரியியல்

[உரிச்சொல் இலக்கணம் உணர்த்துவது]

### க. பொது இலக்கணம்

#### உரிச்சொல்லின் இயல்பு

உகூஎ. உரிச்சொற் கிளவி
விரிக்குங் காலை

யிசையினுங்
குறிப்பினும் பண்பினுந்
தோன்றிப் பெயரினும்
வினையினு மெய்தடு மாறி

யொருசொற்
பலபொருட் குரிமை
தோன்றினும்
பலசொல்
லொருபொருட் குரிமை
தோன்றினும்
பயிலாத வற்றைப்
பயின்றவை சார்த்தித்
தத்த மரபிற்
சென்றுநிலை மருங்கி

னச்சொல் லாயினும்
பொருள்வேறு கிளத்தல்.

கிறுத்த முறையானே உரிச்சொல் லுணர்த்திய வெடுத்துக்கொண்டார்; அதனுன் இவ்வோத்து உரியியலென்னும் பெயர்த்தாயிற்று. தமக்கியல் பில்லா விடைச்சொற்போலாது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்குத் தாமே யுரியவாதலின், உரிச்சொல்லாயிற்று. பெரும்பான்மையுஞ் செய்யுட் குரியவாய் வருதலின் உரிச்சொல்லாயிற் றென்பாரு முளர்.

இ - ள்: உரிச்சொல்லை விரித்துரைக்குமிடத்து, இசை குறிப் புப் பண்பென்னும் பொருண்மேற் றேன்றி, பெயர்க்கண்ணும் வினைக்கண்ணுந் தம்முருபு தடுமாறி, ஒருசொற் பல பொருட் குரித்தாய் வரினும் பலசொல் ஒருபொருட் குரித்தாய் வரினும் கேட்பானாற் பயிலப்படாத சொல்லைப்

பயின்றவற்றோடு சார்த்திப்
பெயரும் வினையுமாகிய
தத்தமக்குரிய
நிலைக்களத்தின்கண்
யாதானுமொரு சொல்லாயினும்
வேறு வேறு பொருளுணர்த்தப்
படும் என்றவாறு.

என்றது, இசை குறிப்புப் பண்பென்னும் பொருளவாய்ப் பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி ஒரு சொல் ஒரு பொருட்குரித்தாதலேயன்றி, ஒருசொற் பல பொருட்கும் பலசொல் ஒருபொருட்கும் உரியவாய் வருவன உரிச்சொல்லென்றும், அவை பெயரும் வினையும்போல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையின், வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடு சார்த்தித் தம்மையெடுத்தோதியே அப்பொரு ளுணர்த்தப் படுமென்றும், உரிச்சொற்குப் பொதுவிலக்கணமும் அவற்றிற்குப் பொரு ளுணர்த்துமுறைமையு முணர்த்தியவாறு.

குறிப்பு மனத்தாற் குறித் துணரப்படுவது.
படுங் குணம்.

பண்பு பொறியா லுணரப்

கருப்பு, தவவென்பன பெயர் வினைப்போலி. துவைத்தல், துவைக்கு மென்பன பெயர் வினைக்கு முதனிலையாயின, உறு முதலாயின மெய்

யியல்]

சொல்லதிகாரம்

கஎஎ

தமொருது வருமாதலின், பெயரினும் வினையினு மெய்தமொழி யென்றது பெரும்பான்மைபற்றியெனக் கொள்க.

அவை கூறியவாற்றாற் பொருட்குரியவாய் வருமாறு முன்னர்க் படும்.

காணப்

மெய்தமொறலும், ஒருசொற் பலபொருட் குரிமையும், பலசொல் ஒரு பொருட்குரிமையும் உரிச்சொற்கு உண்மையான் ஒதினுரேனும், உரிச்சொற்கு இலக்கணமாவது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்குரியவாய் வருதலே யாம்.

ஒருசொல் ஒருபொருட்குரித்தாதல் இயல்பாகலாற் சொல்லாமையே முடியுமென்பது. (௧)

மேல்வருவன இன்ன உரிச்சொல் என்பது

உ௬௮. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா

# வெளிப்பட வாரா

# வுரிச்சொன் மேன.

இ - ள்; வெளிப்பட்ட உரிச்சொல், கிளந்ததனாற் பயனின்மையிற் கிளக்கப்படா; வெளிப்பட வாரா உரிச்சொன்மேற்றுக் கிளந்தோதல், எ - று.

'பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தி யெச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல்' (சொல்-உகஎ.) என்றதனால், பயிலாதவற்றைப் பயின்றவற்றோடு சார்த்திப் பயின்றவற்றைப் பிறிதொன்றனோடு சார்த்தாது தம்மையே கிளந்தும் எல்லா வுரிச்சொல்லும் உணர்த்தப்படு மென்பதுபட்டு நின்றதனை விலக்கி, பயனின்மையாற் பயின்ற உரிச்சொற் கிளக்கப்படாது பயிலாத உரிச்சொல்லே கிளக்கப்படுமென, வரையறுத்தவாறு.

# மேலவென்பது மேனவென நின்றது.

(உ)

## உ. சிறப்பிலக்கணம்

## உரிச்சொற்களுள்

## உ௯௬. அவைதாம்

உறுதவ நனியென
வருஉ மூன்று
மிகுதி செய்யும்
பொருள வென்ப.

வெளிப்படவாரா உரிச்சொல்லைக் கிளந்தோதி விரிக்கின்றார்.

அவைதாம் என்றது வெளிப்படவாரா உரிச்சொற்றாம் என்றவாறு. அதற்கு முடிபு 'அவைதாம், அம்மாமெம்மே மென்னுங் கிளவியும்' (சொல்-௨௧௨.) என்புழி உரைத்தாங் குரைக்க.

இ-ள்: 'உறுபுனற்றந்துல கூட்டி (நாலடி-௧அ௫.) எனவும், 'ஈயாது வீயு முயிர்தவப் பலவே' (புறம்-௨௩௫.) எனவும், 'வந்துநனி வருந்திலை வாழியென் னெஞ்சே' (அகம்-௧௧.) எனவும், உறு, தவ, நனி யென்பன மிகுதியென்னுங் குறிப்புப்பொருளுணர்த்

தும்; எ-று.
குறிப்புச்சொற் பரப்புடைமையான் முற்கூறினர். (௩)
12



'உரு'

'புரை'

௩00. உருவுட் காகும்
புரையுயர் பாகும்.

இ-ள்: 'உருகெழு கடவுள்

' எனவும், ' புரைய மன்ற புரை யோர் கேண்மை ' (நற்றிணை-க.) எனவும், உருவும் புரையும், உட் கும் உயர்பு முணர்த்தும்; எ - று. (௪)

'குரு' 'கெழு'

௩0௫. குருவுங் கெழுவு நிறனா கும்மே.

இ - ள்: 'குருமணித் தாலி' ' செங்கேழ் மென்கொடி ' (அகம்-௮௰.) எனக் குருவும் கெழுவும், நிறமென்னும் பண்புணர்த் தும்; எ - று. (௫)

'செல்லல்' 'இன்னல்'

௩0௨. செல்ல லின்ன லின்று
மையே.

இ - ள் : 'மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்' (அகம்-௨௨.) எனவும், 'வெயில்புறந் தரூஉ மின்னலியக்கத்து' (மலைபடு-௩௭௪.) எனவும், செல்லலும் இன்னலும்' 'யென்னுங் குறிப்புணர்த்தும்; எ - று.

இன்றுமை

(சா)

'மல்லல்' 'ஏ'

௩0௩. மல்லல் வளனே.

௩0௪. ஏபெற் றாகும்.

இ - ள் : 'மல்லன்
மால்வரை' (அகம்-டுஉ.)
எனவும், ' ஏகல் லடுக்கம்'
(நற்றிணை-கககூ.) எனவும்,
மல்லலும் ஏவும், வளமும்
பெற்றுமாகிய
குறிப்புணர்த்தும்; எ - று.
பெற்று—பெருக்கம். ஈது
யிரண்டு சூத்திரம்.

அக்காலத்துப் பயின்றதுபோலும். இவை
(எ) (அ)

'உகப்பு'

'உவப்பு'

௩0ரு. உகப்பே யுயர்த

ஓுவப்பே யுவகை.

இ - ள் : 'விசும்புகந்

தாடாது' எனவும், 'உவந்துவந்

தார்வ

நெஞ்சமோ டாய்நல னளைஇய' (அகம்-கரு.) எனவும், உகப்பும் உவப்பும், உயர்தலும் உவகையுமாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

'பசப்பு' 'பயப்பு'

## கூ0சு. பயப்பே பயனும்.

## கூ0எ. பசப்புநிற னாகும்.

இ - ள் : பயவாக் களரனையர் கல்லா தவர்' (குறள்-சOசு.) எனவும், 'மையில் வாண்முகம் பசப்பூரும்மே' (கலி-எ.) எனவும், பயப்பும் பசப்பும், பயனும் நிற வேறுபாடுமாகிய குறிப்பும் பண்பு முணர்த்தும்; எ - று. (கO) (கக)

முணர்த்தியவாறு.

(கஉ) (கந)

'அலமரல்' 'தெருமரல்'

௩கO. அலமர றெருமர
லாயிரண்டுஞ் சுழற்சி.

இ-ள்: 'அலமர லாயம்' (ஐங்-சுச.) எனவும், 'தெருமர் லுள்ளமோ டன்னை துஞ்சாள்' எனவும், அலமரலும் தெருமரலும், சுழற்சியாகிய குறிப்புணர்த்தும்; எ-று.

(கச)

'மழ' 'குழ'

௩௧௧. மழவுங் குழவு மிளமைப் பொருள.

இ - ள் : 'மழகளிறு' (புறம்-௩௮.) எனவும், 'குழக்கன்று' (புறம்-௧0௩.) எனவும், மழவுங் குழவும், இளமைக் குறிப்புப் பொருளுணர்த்தும் ; எ - று.

(௧௫)

'சீர்த்தி' 'மாலை'

௩௧௨. சீர்த்தி மிகுபுகழ்.

௩௧௩. மாலை யியல்பே.

இ - ள் : 'வயக்கல்சால் சீர்த்தி' எனவும், 'இரவரன் மாலை

யனே' (குறிஞ்சிப்-உகஉ.) எனவும், சீர்த்தியும் மாலையும், பெரும் புகழும் இயல்புமாகிய குறிப்புணர்த்தும்; எ - று. (கக) (கஎ)

'கூர்ப்பு' 'கழிவு'

ரு.கசு. கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்.

இ - ள் : 'துவிகூ ரெவ்வமொடு' (சிறுபாண்-ரு.க.) எனவும், கழிகண் ணோட்டம் எனவும் 'கூர்ப்பும்' 'கழிவும்', ஒன்றனது சிறத்தலாகிய குறிப்பை யுணர்த்தும் என்றவாறு. உள்ள தென்றது முன் சிறவாதுள்ள தென்றவாறு. (கஅ)

'கதழ்வு' 'துனைவு'

## ரு.கரு. கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள.

இ - ள் : 'கதழ்பரி நெடுங்தேர்' (நற்றிணை-உஉ.) எனவும், 'துனைபரி நிவக்கும் புள்ளின் மான' எனவும், கதழ்வும் துனைவும், விரைவாகிய குறிப்புணர்த்தும்; எ - று. (கக)

'அதிர்வு' 'விதிர்ப்பு'

ரு.கசா. அதிர்வும் விதிர்ப்பு நடுக்கஞ் செய்யும்.

இ-ள்: 'அதிர வருவதோர் நோய்' (குறள்-சஉக.) என்வும், 'விதிர்ப்புற வறியா வேமக் காப்பினை' (புறம்-உ0.)



எனவும் அதிர்வும் விதிர்ப்பும், நடுக்கமாகிய குறிப்புணர்த்தும்; எ-று.

அதிழ்வென்று பாடமோதி, காட்டுவாருமுளர்.

' அதிழ்கண முரசம் '

என்றுதாரணங்

(உ0)

'வார்தல்'
'போகல்' 'ஒழுகல்'

௩௧௭. வார்தல் போக
லொழுகன் மூன்று
நேர்பு நெடுமையுஞ்
செய்யும் பொருள.

இ - ள் : ' வார்ந்திலங்கும்
வை யெயிற்று ' (குறு-௧௪.)
' வார்
கையிற் றெழுகை '
(அகம்-௧௭௩.) எனவும், 'போகு
கொடி மருங்
'குல்' 'வெள்வேல்
விடத்தேரொடு காருடைபோகி'
(பதிற்-௧௩.)

எனவும் 'ஒழுகுகொடி மருங்குல்' 'மால்வரையொழுகிய வாழை' (சிறுபாண்-உக.) எனவும், வார்தல், போகல், ஒழுகல் என்னு மூன்றுசொல்லும், நேர்மையும் நெடுமையுமாகிய பண்புணர்த்தும்; எ - று. (உக)

'தீர்தல்'

'தீர்த்தல்'

## ௩௧௮. தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்.

இ - ள்: தீர்தலுந் தீர்த்தலு மென்னு மிரண்டும் விடுதலாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

எ - டு:

வரும்.

'துணையிற் றீர்ந்த கடுங்கண் யானை' (நற்றிணை-௧0௮.)

என

நீர்த்தல் விடுதற்பொருண்மைக்கண் வந்தவழிக் கண்டுகொள்க. நீர்த்த லென்பது செய்வித்தலை யுணர்த்திநின்ற நிலைமையெனின்:—செய்வித்தலை யுணர்த்து நிலைமை வேறேதின், 'இயைபே புணர்ச்சி' (உரியியல்-கஉ.) என்புழியும் இயைப்பென வேறேதல்வேண்டும்; அதனுற் நீர்த்தலுஞ் செய்தலை யுணர்த்துவதோ ருரிச்சொல் லெனவே படுமென்பது.

விடற்பொருட்டாகு மென்பதனை இரண்டனேடும் கூட்டுக. யொருமை மயக்க மெனினு மமையும்.

'கெடவரல்' 'பண்ணை'

பன்மை

(உஉ)

# ௩கக. கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு.

இ-ள்: 'கெடவர லாயமொடு' எனவும், 'பண்ணைத் தோன் றிய வெண்ணான்கு பொருளும்' (பொருள், மெய்ப்பாட்டியல்-க.) எனவும், கெடவரலும் பண்ணையும், விளையாட்டாகிய குறிப் புணர்த்தும்; எ-று. (உக.)

'தட' 'கய' 'நளி'

# ௩உ௦. தடவுங் கயவு நளியும்

; எ - று.
(உ௭)

'தட' 'கய' 'நளி'
என்பவற்றிற்கு, மேலும் பொருள்

௩௨௧. அவற்றுள்

தடவென் கிளவி
கோட்டமுஞ் செய்யும்.

௩௨௨. கயவென் கிளவி
மென்மையு மாகும்.

௩௨௩. நளியென் கிளவி
செறிவு மாகும்.

இ - ள் : 'தடமருப்பெருமை'

(நற்-௧௨௰.) 'கயந்தலை மடப்பிடி'

(நற்-கஙஎ.) 'நளியிருள்' * எனத் தடவென்கிளவி முதலாயின, பெருமையேயன்றிக் கோட்டமும் மென்மையுமாகிய பண்பும் செறிவாகிய குறிப்பு முணர்த்தும்; எ - று (உரு) (உ௬) (உஎ)

'பழுது' 'சாயல்' 'முழுது'

## ௩உ௪. பழுதுபய மின்றே.

## ௩உரு. சாயன் மென்மை.

## ௩உ௬. முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே.

இ - ள்: 'பழுதுகழி வாழ்நாள்' 'சாயன் மார்பு' (பதிற்-கசு.) 'மண்முழுதாண்ட' எனப் பழுது முதலாயின, பயமின்மையாகிய குறிப்பும் மென்மையாகிய பண்பும் எஞ்சாமையாகிய குறிப்பு முணர்த்தும்; எ - று. (உஅ) (உகூ) (௩0)

'வம்பு' 'மாதர்' 'நம்பு' 'மே'

## ௩உஎ. வம்புநிலை யின்மை.

# ௩உஅ. மாதர் காதல்.

௩உகூ. நம்பு மேவு நசையா கும்மே.

இ - ள்: 'வம்புமாரி'; (குறுந்-கூகூ.) 'மாதர் நோக்கு' 'நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி' (அகம்-ககஅ.) 'பேரிசை நவிரமேஎ வுறையுங், காரிகை யுண்டி.; (மலைபடு-அஉ.) என வம்பும் மாதரும், நிலையின்மையுங் காதலுமாகிய குறிப்புணர்த்தும். நம்பும் மேவும் நசையாகிய குறிப்புணர்த்தும்; மேவு - நசையாக. எ - று. (௩௧) (௩௨) (௩௩)

'ஓய்தல்' 'ஆய்தல்' 'நிழத்தல்' 'சாய்'

௩௩0. ஓய்த லாய்த னிழத்தல் சாஅ
யாவயி னான்கு முள்ளத னுணுக்கம்.

இ - ள்: 'வேனி லுழந்த வறிதுயங் கோய் களிறு' (கலி - எ.) 'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை' (கலி-கூகூ.)

---

* 'சிலைப்புலல் சேற்றுத் தலைக்கை தந்தர், வளிதரா வருதல்' (பதிற்று-ருக.) எனவும் பாடம்.

[உரி

'நிழத்த யானை மேய்புலம்
படர' (மது-நாங.) 'கயலற
லெதிரக்
கடும்புனற் சாஅய்'
(நெடுநல்-கஅ.) என ஓய்தன்
முதலாயின
நுணுக்கமாகிய
குறிப்புணர்த்தும் என்றவாறு.
ஆய்ந்த தானை—
பொங்குதல்
விசித்தலானுணுகிய தானை.
* உள்ள தென்றது முன்
னுணுகாதுள்ள எ - று.

(௩௪)

'புலம்பு' 'துவன்று' 'முரஞ்சல்'
'வெம்மை'

௩௩௧. புலம்பே தனிமை.

௩௩௨. துவன்றுநிறை வாகும்.

௩௩௩. முரஞ்சன் முதிர்வே.

௩௩௪. வெம்மை வேண்டல்.

இ-ள்: 'புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி' (அகம்-எ.) எனவும், 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்' (நற்-௧௭0.)

என

வும், 'குன்முரஞ் செழிவி' எனவும், 'வெங்காமம்' (அகம்-கூ.) எனவும், புலம்பு முதலாயின, தனிமையும் நிறைவும் முதிர்வுமாகிய குறிப்பும் விரும்புதலாகிய பண்புமுணர்த்தும் ; எ - று.

(நடு) (நசு) (நஎ) (நஅ)

'பொற்பு' 'வறிது' 'எற்றம்'

நநடு. பொற்பே பொலிவு.

நநசு. வறிதுசிறி தாகும்.

நநஎ. ஏற்ற நினைவுந் துணிவு மாகும்.

இ - ள்: 'பெருவரை யடுக்கம் பொற்ப' (நற்-நச.) எனவும், 'வறிதுவடக் கிறைஞ்சிய' (பதிற்-உச-) எனவும், 'கானலஞ்சேர்ப் பன் கொடுமை யேற்றி' (குறுங்-கசடு.) 'எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்' எனவும், பொற்பு முதலாயின, முறை யானே பொலிவும், சிறிதென்பதூஉம்' நினைவும் துணிவுமாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

(நசு) (சo) (சக)

'பிணை'

'பேண்'

நநஅ. பிணையும் பேணும் பெட்பின் பொருள.

இ - ள்: 'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்' எனவும்,

'அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்' (புறம்-கூசு.) எனவும், பிணேயும் பேனும், பெட்பின் பொருளாகிய புறந்தருதலென்னுங் குறிப்புணர்த்தும்; எ - று.

பெட்பின் பொருள வென்றதனுல், பெட்பின் பொருளாகிய விரும்புத லுணர்த்தலுங் கொள்க. அது வந்தவழிக் கண்டுகொள்க. (சஉ)

* 'விப்தலானுனுயெதானே' எனவும் பாடம்,

# யியல்

# சொல்லதிகாரம்

# க்அங்

'பணே'

ங்ஙகூ. பணேயே பிழைத்தல் பெருப்பு மாகும்.

இ - ள். பணேத்துவீழ் பகழி'

எனப் பணே யென்பது பிழைத்த

லாகிய குறிப்புணர்த்தும்; அதுவே யன்றி 'வேய்மருள் பணேத் தோள்' (அகம்-க.) எனப் பெருப்பாகிய குறிப்பு முணர்த்தும்,

எ - று.

பெருமையாகிய பண்புணர்த்தாது மென்பார் பெருப்பென்றார்.

பெருத்தலாகிய குறிப்புணர்த்து (சக)

'படர்'

௩௪0. படரே யுள்ள்ல் செலவு மாகும்.

இ - ள்: 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி' (புறம்-சஎ.) 'கறவை கன்றுவயிற் படர' (குறுந்-௧0அ.) எனப் படரென்பது உள்ளுதலுஞ் செலவுமாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

'பையுள்' 'சிறுமை'

௩௪௧. பையுளுஞ் சிறுமையு நோயின் பொருள.

இ - ள்: 'பையுண்மாலை' (குறு-௧௧௫.) எனவும், 'சிறுமை யுறுப செய்பறி யலரே' எனவும், பையுளுஞ்சிறுமையும், நோயாகிய குறிப்புணர்த்தும்' எ - று. (சரு)

'எய்யாமை'

௩௬௨. எய்யா மையே யறியா மையே.

இ - ள்; 'எய்யா மையலை நீயும் வருந்துதி' (குறுஞ்சிப்-அ.) என எய்யாமை அறிவின்மையாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

அறிதற் பொருட்டாய் எய்தலென்றுனும் எய்த்தலென்றுனும் சான்றோர் செய்யுட்கண் வாராமையின், எய்யாமை எதிர்மறையன்மை யறிக. (௬௪)

'நன்று'

௩௬௩. நன்றுபெரி தாகும்.

இ - ள்: 'நன்று, மரிதுதுற் றனையாற் பெரும' (அகம்-௧0.) என நன்றென்பது பெரிதென்னுங் குறிப்புணர்த்தும் எ - று.

பெருமை யென்னுது பெரிதென்றதனுன் நன்றென்பது வினையெச்சமாதல் கொள்க. (௬௭)

'தா'

௩௬௪. தாவே வலியும் வருத்தமு மாகும்.

இ - ள்: 'தாவி னன்பொன் றைஇய பாவை' (அகம்-௨௧௨.) எனவும், 'கருங்கட்டாக்கலை பெரும்பிறி துற்றென; (குறு-௬௯.) எனவும், தாவென்பது வலியும் வருத்தமுமாகிய குறிப்புணர்த்தும்' எ - று. (௬௮)

## 'தெவு' 'தெவ்வு'

**௩௪௫. தெவுக்கொளற் பொருட்டே.**

**௩௪௬. தெவ்வுப்பகை யாகும்.**

இ - ள்: 'நீர்த் தெவுநிறைத் தொழுவர்' (மது-அ௬.) எனவும், 'தெவ்வுப் புலம்' எனவும், தெவுந் தெவ்வும், முறையானே கொள்ளுதலும் பகையுமாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

(௪௬)(௫0)

## 'விறப்பு' 'உறப்பு' 'வெறுப்பு'

**௩௪௭. விறப்பு முறப்பும்**

வெறுப்புஞ் செறிவே.

இ - ள்: 'விறந்த காப்போ டுண்ணின்று வலியுறுத்தும்' எனவும், 'உறந்த விஞ்சி' எனவும், 'வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' (புறம்-ருங.) எனவும், விறப்பு முதலாயின செறிவென் னுங் குறிப்புணர்த்தும்; எ - று. (ருக)

'விறப்பு' என்பதற்கு, மேலும் ஒரு பொருள்

ருசுஅ. அவற்றுள்

விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்.

இ - ள்: 'அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல' (பெரும் பாண்-உஉரு.) என விறப்பென்பது செறிவே யன்றி வெருவுதற் குறிப்புமுணர்த்தும்; எ - று. (ருஉ)

'கம்பலை'

'சும்மை' 'கலி' 'அழுங்கல்'

௫௪௧. கம்பலை சும்மை கலியே
யழுங்க லென்றிவை
நான்கு மரவப் பொருள.

இ - ள்: 'கம்பலை மூதூர்' (புறம்-௫௪.) எனவும், 'ஒரு பெருஞ் சும்மையொடு' எனவும், 'கலிகொளாய மலிபுதொகு பெடுத்த' (அகம்-௧௧.) எனவும், 'உயவுபுணர்ந் தன்றிவ் வழுங்க லூரே' (நற்-உ0௩.) எனவும், கம்பலை முதலாகிய நான்கும் அரவ மாகிய இசைப்பொருண்மை யுணர்த்தும்; எ - று. (௫௩)

'அழுங்கல்' என்பதற்கு,

நடுO. அவற்றுள்
அழுங்க லிரக்கமுங்
கேடு மாகும்.

இ - ள்: பழங்க ணோட்டமு
நலிய வழுங்கின னல்லனோ'
(அகம்-சுசு.)எனவும்,
'குணனழுங்கக் குற்ற
முழைநின்று கூறுஞ்
சிறியவர்கட்கு' (நாலடி-நடுந.)
எனவும், அழுங்கல், அரவமே
யன்றி இரக்கமுங் கேடுமாகிய குறிப்புணர்த்தும்;

எ - று, (நுச) யியல்]

## சொல்லதிகாரம்

## கஉரு

**'கழு'**

### ௩ருக. கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்.

இ - ள்: 'கழுமிய ஞாட்பு' (களவழி-கக.) எனக்கழுமென் பது மயக்கமாகிய குறிப்புணர்த்தும்; எ-று. (௫௫)

**'செழுமை'**

### ௩ருஉ. செழுமை வளனுங் கொழுப்பு மாகும்.

இ - ள்: 'செழும்பல் குன்றம்' எனவும், 'செழுந்தடி தின்ற செந்நாய்' எனவும், செழுமை, வளனுங் கொழுப்புமாகிய பண் புணர்த்தும்; எ - று. (௫௬)

'விழுமம்'

## ௩௫௩. விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்.

இ - ள்: 'விழுமியோர் காண்டொறுஞ் செய்வர் சிறப்பு' (நாலடி-௧௫௯.) எனவும், 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' (புறம்-௨௭.) எனவும், நின்னுறு விழுமங் களைந்தோன். (அகம்-௧௭௰.) எனவும், விழுமம் முறையானே சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையுமாகிய குறிப்புணர்த்தும் எ - று. (௫௭)

'கருவி' 'கமம்'

## ௩௫௪. கருவி தொகுதி.

௩௫௫. கமநிறைந் தியலும்.

இ - ள்: 'கருவி வானம், (புறம்-௧௫௯.) எனவும், கமஞ்சூன் மாமழை' (அகம்-௪௩.) (குறுந்-௧௫௮.) எனவும், கருவியுங் கமமும், தொகுதியும் நிறைவுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. 'கருவிவானம்' என்புழிக் கருவி மின்னுமுழக்கு முதலாயவற்றது தொகுதி. (௫௮) (௫௯)

'அரி' 'கவவு'

௩௫௬. அரியே யைம்மை.

௩௫௭. கவவகத் திடுமே.

இ - ள்; 'அரிமயிர்த் திரண் முன்கை' (புறம்-௧௧.) எனவும், 'கழுஉவிளங்காரங் கவைஇய மார்பே' (புறம்-௧௯.) எனவும், அரியுங் கவவும், ஐம்மையும் அகத்திடு மாகிய குறிப்புணர்த்தும்; எ - று. (௬௦) (௬௧)

'துவைத்தல்' 'சிலைத்தல்' 'இயம்பல்' 'இரங்கல்'

௩௫௮. துவைத்தலுஞ் சிலைத்தலு மியம்பலு மிரங்கலு
மிசைப்பொருட் கிளவி யென்மனார் புலவர்.

இ - ள்; 'வரிவளை துவைப்ப' எனவும், 'ஆமா நல்லேறு சிலைப்ப' (முருகு-௩௧௫.) எனவும்,

க்அசா

தொல்காப்பியம்

[உரி

'கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப,' (புறம்-௩௬.)

எனவும், 'எறிரங்கிருளிடை' (கலி-௪௬.) எனவும், துவைத்தல் முதலாயின இசைப்பொரு ளுணர்த்தும் என்றவாறு. (௬௨)

'இரங்கல்' என்பதற்கு, மேலும் ஒருபொருள்

௩௫௯. அவற்றுள்

இரங்கல் கழிந்த பொருட்டு மாகும்.

இ - ள்: 'செய்திரங்காவினை' (புறம்-௯௦.) என இரங்கல், இசையே யன்றிப் பொருளது கழிவாகிய குறிப்பு முணர்த்தும்; எ - று.

கழிந்த பொருள்பற்றி வரும் கவலையைக் கழிந்த பொருளென்றார். (௬௩)

'இலம்பாடு' 'ஒற்கம்'

௩௬௦. இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை.

இ - ள்: 'இலம்படு புலவரேற்றகை நிறைய'(மலைபடு-௫௭௬.) எனவும், 'ஒக்கலொற்கஞ் சொலிய' (புறம்-௩௨௭.) எனவும், இலம்பாடும் ஒற்கமும் வறுமையாகிய குறிப்புணர்த்தும்; எ-று.

இலமென்னு முரிச்சொல், பெரும்பான்மையும் பாடென்னுந் தொழில் பற்றி யல்லது வாராமையின் இலம்பாடென்றார். (௬௪)

'ஞெமிர்தல்' 'பாய்தல்'

௩௬௧. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.

இ - ள்: 'தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து' (நெடு நல்-௯௦.) எனவும், 'பாய்புனல்' எனவும், ஞெமிர்தலும் பாய்தலும், பரத்தலாகிய குறிப்புணர்த்தும்; எ - று. (௬௫)

'கவர்வு' 'சேர்' 'வியல்'

௩௬௨. கவர்வுவிருப் பாகும்.

௩௬௩. சேரே திரட்சி.

௩௬௪. வியலென் கிளவி யகலப் பொருட்டே.

இ - ள்: 'கவர்நடைப் புரவி' (அகம்-௧௩௦.) எனவும், 'சேர்ந்து செறி குறங்கு' (நற்றிணை-௧௭௦.) எனவும், 'வியலுலகம்' எனவும், கவர்வு முதலாயின முறையானே விருப்புந் திரட்சியும் அகலமுமாகிய குறிப்புணர்த்தும்; எ - று. (௬௬) (௬௭) (௬௮)

'பேம்', 'நாம்' 'உரும்'

௩௬௫. பேநா முருமென வரூஉங் கிளவி
யாமுறை மூன்று மச்சப் பொருள.

இ - ள்: 'மன்ற மராஅத்த பேமுதிர் கடவுள்' (குறுந்-௮௭.) எனவும், 'நாநல்லார்' எனவும், 'உருமில் சுற்றம்' (பெரும்பாண்-

யியல்]

சொல்லதிகாரம்

௪௪௭.) எனவும், பே முதலாகிய மூன்றும்

புணர்த்தும்; எ - று.

'வய' 'வான்'

'துயவு'

௩௬௬. வயவலி யாகும்.

௩௬எ. வாளொளி யாகும்.

௩௬அ. துயவென் கிளவி
யறிவின் றிரிபே.

# ௬அ

# அச்சமாகிய குறிப்

(௨௯)

இ - ள் : 'துன்னருந் துப்பின்
வயமான்' (புறம்-சச.) என

வும், 'வாண்முகம்' (புறம்-௯.) எனவும், 'துயவுற்றேம் யாமாக்' எனவும், வயமுதலாயின, வலியும் அறிவு வேறுபடுதலுமாகிய குறிப்பும் ஒளியாகிய பண்புமுணர்த்தும்;எ-று.(எ0)(எக)(எ௨)

'உயா' 'உசா' 'வயா'

௩௭௯. உயாவே யுயங்கல்.

௩௭0. உசாவே சூழ்ச்சி.

௩௭௧. வயாவென் கிளவி
வேட்கைப் பெருக்கம்.

இ - ள் : 'பருந்திருந் தூயாவிளி பயிற்று மியாவுயர் கனந்தலை' (அகம்-கசு.) எனவும், 'உசாத்துணை' (குறு-உ௰எ.) எனவும், 'வய்வுறு மகளிர்' (புறம்-உ௰.) எனவும், உயா முதலாயின, முறையானே உயங்கலுஞ் சூழ்ச்சியும் வேட்கைப் பெருக்கமுமாகிய குறிப்புணர்த்தும் ; எ - று. (எங) (எச) (எரு)

'கறுப்பு' 'சிவப்பு'

## ௩எஉ. கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள.

இ - ள் : 'நிற்கறுப்பதோ ரருங்கடி முனையள்' எனவும், 'நீ சிவந் திறுத்த நீரழி பாக்கம்' (பதிற்-கங.) எனவும், கறுப்புஞ் சிவப்பும், வெகுளியாகிய குறிப்புணர்த்தும் ; எ - று.

கறுமை செம்மையென்னாது கறுப்புச் சிவப்பென்றதனான், தொழிற்பட்டுழியல்லது அவை வெகுளி யுணர்த்தாமை கொள்க. (எசு

அவற்றிற்கு, மேலும் ஒரு பொருள்

## ௩எ௩. நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப.

இ - ள் : 'கறுத்த காயா' 'சிவந்த காந்தள்' (பதிற்-கரு.) என அவை வெகுளியேயன்றி நிறவேறுபாடுணர்த்தற்கு முரிய ; எ-று.

இவை வெளிப்படு சொல்லாயினும், கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள வென்றதனால், கறுங்கண், செவ்வாய் எனப் பண்பாயவழி யல்லது தொழிலாயவழி நிறவேறுபா டுணர்த்தா வென்பது படுதலின், அதனைப் பாதுகாத்தவாறு. (எஎ)

க்அஅ

தொல்காப்பியம்

[உரி

'நொசிவு' 'நுழைவு' 'நுணங்கு'

நஎஅ. நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை.

இ - ள் : 'நொசிமட

மருங்குல்' (கலி-௬ய.) எனவும், 'நுழை நூற் கலிங்கம்' (மலைபடு-ருசுக.) எனவும், 'நுணங்குதுகி லுடைக் கம்போல' (நற்றி-கரு.) எனவும், நொசிவு முதலாயின, நுண்மை யாகிய பண்புணர்த்தும்; எ - று.

(எஅ)

'புனிறு'

௩எரு. புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே.

இ-ள்: 'புனிற்ருப் பாய்ந்தெனக் கலங்கி' (அகம்-ருசு.) எனப் புனி றென்பது ஈன்றணிமையாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

'நனவு'

**௩எசு. நனவே களனு மகலமுஞ் செய்யும்.**

இ-ள்: 'நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்' (அகம்-அஉ.) எனவும், 'நனந்தலையுலகம்' (பதிற்-கூ௩.) எனவும், நனவு, களனும் அகலமுமாகிய குறிப்புணர்த்தும்; எ-று. (அ0)

'மத'

**௩எஎ. மதவே மடனும் வலியு மாகும்.**

இ-ள்: 'பதவு மேய்ந்த மதவுநடை நல்லான்' (அகம்-கச.) எனவும், 'கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு' (அகம்-௩கூ.) எனவும், மதவென்பது மடனும் வலியுமாகிய குறிப்புணர்த்தும்; எ-று.

## அதற்கு, மேலும் இரு பொருள்

## ௩௭அ. மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே.

இ - ள்: 'மதவிடை' எனவும், 'மாதர் வான்முக மதைஇய நோக்கே' (அகம்-௩௩௦.) எனவும், மடனும் வலியுமே யன்றி மிகுதியும் வனப்புமாகிய குறிப்புஞ் சிறுபான்மை யுணர்த்தும் என்றவாறு. மதவிடை யென்புழி மிகுதி, உள்ள மிகுதி. (அஉ)

'யாணர்'

## ௩௭௯. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.

இ - ள்: 'மீன்றெடு பெயரும் யாண ரூர' (நற் - உ௩௦.) என யாணரென்பது வாரி புதிதாகப் படுதலாகிய குறிப்புணர்த்தும்; எ - று.

'அமர்தல்' 'யாணர்'

## ஙுஅ0. அமர்தன் மேவல்.

## ஙுஅக. யாணுக் கவினும்.

இ - ள்: 'அகனமர்ந்து செய்யா ளுறையும்' (குறள்-அச.) எனவும், 'யாணது பசலை' (நற்றிணை-ருo.) எனவும், அமர்தலும் யாணும், முறையானே மேவுதலுங் கவினுமாகிய குறிப்புணர்த்தும்; எ - று. (அச) (அரு)

'பாவு' 'பழிச்சு'

ந௮உ. பரவும் பழிச்சும்
வழுத்தின் பொருள.

இ - ள் : 'நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே' (புறம்-ந௫.) எனவும், 'கைதொழூஉப் பழிச்சி' (மது-௬௬௪.) எனவும், பரவும் பழிச்சும், வழுத்துதலாகிய குறிப்புணர்த்தும் ; எ - று.
(௮௬)

'கடி' என்னுஞ் சொல்

ந௮ந. கடியென் கிளவி

வரைவே கூர்மை காப்பே புதுமை

விரைவே விளக்க
மிகுதி சிறப்பே

யச்ச முன்றேற் றுயி ரைந்து
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா குமமே.

இ - ள் : கடியென்னு முரிச்சொல் வரைவு முதலாகிய பத்துக்குறிப்பு முணர்த்தும்; எ - று.

எ - டு: 'கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு' (குறள்-கஉஅ.) என வரைவும், 'கடிநுனைப் பகழி' எனக் கூர்மையும், 'கடிகா' (களவழி-உக.) எனக் காப்பும், 'கடிமலர்' எனப் புதுமையும், 'கடுமான்' (அகம்-கூச.) என விரைவும், 'கடும்பகல்' (அகம்-கசஅ.) என விளக்கமும், 'கடுங்கா லொற்றலின்' (பதிற் உடு.) என மிகுதியும், 'கடுநட்பு' எனச் சிறப்பும், 'கடியையா னெடுந் தகை செருவத் தானே' என அச்சமும், 'கொடுஞ்சுழிப் புகார்த்தெய்வ நோக்கிக் கடுஞ்சூ டருகுவ னினக்கே' (அகம்-ககO.) என முன்தேற்றும் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

முன்தேற்று-புறத்தின்றித் தெய்வமுதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல். (அஎ)

அதற்கு, மேலும் இரு பொருள்

கூஅச. ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே.

இ - ள்: 'கடுத்தன ளல்லளோ வன்னை' எனவும், 'கடிமிளகு தின்ற கல்லா மந்தி' எனவும், கடியென்கிளவி மேற்கூறப்பட்ட பொருளேயன்றிச் சிறுபான்மை ஐயமாகிய குறிப்புங் கரிப்பாகிய பண்பு முணர்த்துதற்கு முரித்து எ - று. (அஅ)

# கூகூ௦

# தொல்காப்பியம்

'ஐ'

'முனைவு' 'வை' 'எறும்'

௫௱௮௫. ஐவியப் பாகும்.

௫௱௮௬. முனைவுமுனி
வாகும்.

௫௱௮௭. வையே கூர்மை.

௫௱௮௮. எறுழ்வலி யாகும்.

[உரி

இ - ள்: 'ஐதே காமம் யானே' (நற்றிணை-கசாரு.) எனவும் 'சேற்றுநில முனைஇய செங்கட் காரான்' (அகம்-சகூ.) எனவும், 'வ்வநுனைப் பகழி' (முல்லை-எரு.) எனவும், 'போரேறுழ்த்திணி தோள்' (பெரும்பாண்-கூரு.) எனவும், ஐ முதலாயின முறை யானே வியப்பும் முனிவுங் கூர்மையும் வலியுமாகிய குறிப்புணர்த் தும்; எ - று.
(அகூ) (கூ0) (கூக) (கூஉ)

## ரு. சொல்லும் பொருளும்

### உரிச்சொற்

பொருள் மரபை ஒத்தது

ருஅ௯. மெய்பெறக் கிளந்த
வுரிச்சொ லெல்லா
முன்னும் பின்னும்
வருபவை நாடி
யொத்த மொழியாற்

புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற்
றோன்றுமன் பொருளே.

இ - ள்: இச்சொல் இப்பொருட்குரித்தென மேற்கூறப்பட்ட உரிச்சொ லெல்லாவற்றையும், அவற்று முன்னும் பின்னும் வருமொழிகளை ஆராய்ந்து, அம்மொழிகளுட் டக்க மொழியாலே ஒருபொரு ளுணர்த்துக; இவ்வாறுணர்த்தவே, வரலாற்றுமுறைமையாற் றத்தமக்குரித்தாய பொருள் விளங்கும்; எ - று.

இஃது என் சொல்லியவாறோ வெனின்:—

'உறுதவ நனியென வரூஉ மூன்று
மிகுதி செய்யும் பொருள வென்ப'

எனவும்,

(சொல்-உகக)

'செல்ல வின்ன வின்னு மையே' (சொல்-௩௰௨.)

எனவும், ஓதியவழி, அவை வழக்கிடைப் பயின்ற சொல்லன்மையான், இவை மிகுதியும் இன்னாமையு முணர்த்துமென்று ஆசிரியராணையாற் சொல்வதல்லது வரலாற்றாற் பொருளுணர்த்துமெனப்படாவோ வென்று ஐயுறுவார்க்கு, 'உறுகால்' (நற்-௧௭.) 'தவப்பல' (புறம்-௨௩௫.) 'நனி சேய்த்து' (ஐங்குறு-௪௪௩.) எனவும், 'மணங்கமழ் வியன்மார்பணங்கிய செல்லல்' (அகம்-௨௨) எனவும், முன்னும் பின்னும் வருஞ்சொன் னோடு அவற்றுள் இச் சொல்லோடு இவ்வுரிச்சொல் இயையுமென்று கடைப்பிடிக்கத், தாம் புணர்த்த சொற்கேற்ற பொருள் விளக்குதலின், உரிச்சொல்லும் வரலாற்றாற் பொருளுணர்த்து மென்பது பெறப்படுமென ஐய மகற்றியவாறெனக் கொள்க. வரலாற்றாற் பொருளுணர்த்தாவாயின், குழுவின் வந்த குறிநிலைவழக்குப்போல இயற்கைச் சொல்லெனப்படா வென்பது. (௩௩

யியல்]

சொல்லதிகாரம்

௧௯௧

கூறிய சொற்கள் பிறபொருளும் உணர்த்தல்

௩௯௦. கூறிய கிளவிப்

பொருணிலை யல்ல

வேறுபிற தோன்றினு
மவற்றொடுங் கொளலே.

இ - ள் : முன்னும் பின்னும் வருபவை நாடியவழி, உரிச் சொற்குக் கூறப்பட்ட பொருளேயன்றிப் பிற பொருடோன்று மாயினும், கூறப்பட்டவற்றோடு அவற்றையுங் கொள்க; எ - று.

'கடிநாறும் பூந்துணர்' என்றவழிக் கடியென்பது முன்னும் பின்னும் வருபவை நாட, வரைவு முதலாயின பொருட்கேலாது மணப் பொருட்டா யினவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன.

(கச)

**௩௯௧. பொருட்குப்பொருடெரியி னதுவரம் பின்றே.**

**பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்திப் பொருளுணர்த்துங்காற் படுமுறைமை யுணர்த்துகின்றார்.**

இ - ள் : ஒரு சொல்லை ஒரு சொல்லாற் பொருளுணர்த்திய வழி அப்பொருளுணர்த்த வந்த சொற்கும் பொருள் யாதெனப் பொருட்குப் பொருடெரியுமாயின், மேல் வருவனவற்றிற்கெல்லாம் ஈதொத்தலின், அவ்வினா இறைவரம்பின்றி யோடும்; அதனாற் பொருட்குப் பொருடெரியற்க; எ - று.

ஒரு சொற்குப் பொருளுரைப்பது பிறிதோர் சொல்லானன்றே; அச்சொற்பொருளும் அறியாதானை உணர்த்துமா றென்னையெனின், அது வருகின்ற சூத்திரத்தாற் பெறப்படும். (௧௫)

அதனை உணர்த்தும் ஆற்றல்

**௩௯௨. பொருட்குத்திரி பில்லை யுணர்த்த வல்லின்.**

இ - ள்: 'உறுகால்' (நற்-நஎ.) என்புழி உறுவென்னுஞ் சொற்குப் பொருளாகிய மிகுதி யென்பதன் பொருளும் அறியாத மடவோனுயின், அவ்வாறுஒருபொருட்கிளவி கொணர்ந் துணர்த்த லுருது, கடுங்காலது வலி கண்டாய், ஈண்டு உறுவென்பதற்குப் பொருளென்று தொடர்மொழி கூறியானும், கடுங்காலுள்வழிக் காட்டியானும், அம் மாணுக்க னுணரும் வாயிலறிந்து உணர்த் தல் வல்லனுயின் அப்பொரு டிரிபு படாமல் அவனுணரும் என்ற வாறு. அவற்ருனு முணர்தலாற்ருதானே உணர்த்துமா றென்னை யெனின்:— அதற்கன்றே வருஞ்சூத்திர மெழுந்த தென்பது. (௩௯௨)

அதனை உணரும் ஆற்றல்

## ௩௯௩. உணர்ச்சி வாயி லுணர்வோர் வலித்தே.

இ - ள்: வெளிப்படத் தொடர்மொழி கூறியானும் பொருளைக் காட்டியானும் உணர்த்தவும் உணராதானை உணர்த்தும் வாயி லில்லை; உணர்ச்சியது வாயில் உணர்வோர துணர்வை வலியாக வுடைத்தாகலான்; எ - று.

யாதானு மோராற்று னுணருந்தன்மை அவற்கில்லையாயின், புணர்த்தற் பாலனல்ல னென்றவாறு.

அவனே
(கஎ)

சொற்களின்
பொருள்கட்குக் காரணம் உண்டு

கூகூச. மொழிப்பொருட்
காரணம் விழிப்பத் தோன்ற.

இ - ள்: உறு தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொருளாதல் வரலாற்று முறைமையாற் கொள்வதல்லது, அவை அப்பொருளவாதற்குக் காரணம் விளங்கத் தோன்ற; எ - று.

பொருளொடு சொற்கியைபு இயற்கை யாகலான் அவ்வியற்கையாகிய இயைபாற் சொற்பொரு ளுணர்த்து மென்ப ஒரு சாரார். ஒரு சாரார் பிற காரணத்தா னுணர்த்து மென்ப. அவற்றுண் மெய்மையாகிய காரணம் ஆசிரியர்க்குப் புலனாவதல்லது நம்மனோர்க்குப் புலனாகாமையின், மொழிப்பொருட் காரண மில்லை யென்னாது விழிப்பத் தோன்றா' வென்றார். அக்காரணம் பொதுவகையான் ஒன்றாயினுஞ் சொற்றோறு முண்மையிற் சிறப்பு வகையாற் பலவாம்; அதனான் விழிப்பத்தோன்றா வெனப் பன்மையாற் கூறினார். உரிச்சொற்பற்றி யோதினாரேனும், ஏனைச்சொற்பொருட்கு மிஃ தொக்கும். (௯௮)

உரிச்சொற்களில் எழுத்துப் பிரிந்து இசைத்தல் இல்லை

௩௯௫. எழுத்துப்பிரிந் திசைத்த லிவணியல் பின்றே.

இ - ள்: முதனிலையும் இறுதிநிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருளுணர்த்தல் உரிச்சொல்விடத் தியை புடைத்தன்று; எ - று.

இவணியல்பின்றெனவே, எழுத்துப் பிரிந்து பொருளுணர்த்தல் பிறாண்டு இயல்புடைத் தென்பதாம். அவையாவன, வினைச்சொல்லும் ஒட்டுப் பெயருமாம். பிரிதலும் பிரியாமையும் பொருளுணர்த்துவனவற்றிற்கே யாகலின், கூறை கோட்படுதல் கடவுளர்க்கு எய்தாதவாறுபோல, இடைச் சொற்கு இவ்வாராய்ச்சி யெய்தாமை யறிக.

தவ நனியென்னுந் தொடக்கத்தன குறிப்பு வினையெச்சம் போலப் பொருளுணர்த்தலின், அவைபோலப் பிரிக்கப்படுங்கொல்லோ வென்றை யுறாமை ஐயமகற்றியவாறு. (௯௯)

௪. புறனடை

## ௩௯௬. அன்ன பிறவுங்

## கிளந்த வல்ல

பன்முறை யானும்

பரந்தன வரூஉ

முரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
வியன்ற மருங்கி னிணைத்தென வறியும்

வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப் பிடித்
தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்.

இ - ள்: அன்ன பிறவும் கிளந்தவல்ல பன்முறையானும் பரந்தன வரூஉ முரிச்சொல் லெல்லாம் என்பது, சொல்லப்பட்

வியல்]

சொல்லதிகாரம்

கசுரு

டனவே யன்றி அவைபோல்வன பிறவும் பல வாற்றானும் பரந்து வரு முரிச்சொல்லெல்லாம் என்றவாறு. பொருட்குறைகூட்ட

வியன்ற மருங்கினிணைத்தென

வறியும் வரம்பு
தமக்கின்மையின்
என்பது, பொருளொடு
புணர்த்த இசை குறிப்புப்
பண்புபற்றித்
தாமியன்ற நிலத்து
இத்துணையென
வரையறுத்துணருமெல்லை
தமக்கின்மையான்
எஞ்சாமைக்
கிளத்தலரிதாகலின் என்றவாறு.
வழி நனி
கடைப்பிடித்தோம்படை
யாணையிற் கிளந்தவற்றியலாற்
பாங்குறவுணர்தல் என்பது;

'இசையினுங் குறிப்பினும்
பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினு மெய்தடு
மாறி. (சொல்-உகஎ.)

எனவும், 'முன்னும் பின்னும் வருபவை நாடி' எனவுங் கூறிய நெறியைச் சோராமற் கடைப்பிடித்து 'எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்'

(சொல்-உகஎ.) எனவும்,

'ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற் றோன்றுமன் பொருளே'

(சொல்-உ௮௧.)

எனவும், என்றாற் றரப்பட்ட
பாதுகாவ லாணையிற்
கிளந்தவற்றியல்பொடு

**மரீஇயவற்றை முறைப்பட வுணர்க என்றவாறு.**

குறிப்புப்பொருண்மை பலவகைத்தாகலானும், பெயரினு வினையினு மெய்தடுமாறியுந் தடுமாறுதும் ஒருசொற் பலபொருட் குரித்தாயும் வருதலானும், ஈறுபற்றித் தொகுத்துணர்த்தற்கு அன்னவீறுடைய வன்மையானும்,

**'பன்முறையானும் பரந்தன வரூஉம்' என்றார்.**

பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறையென்றார் ; ஒருவன் வினையும் பயனும் இன்றியமையாமையின், 'வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தின் றுலகு, (குறள்-௬௧௨.) 'பயக்குறை யில்லைதாம் வாழு நாளே' (புறம்-௧௮௮.) என்றாற்போல, பொருட்குறை கூட்ட வரம்பு தமக்கின் மையி னென இயையும்.

இருமை யென்பது கருமையும் பெருமையு மாகிய பண்புணர்த்தும். சேவென்பது சேய்மையாகிய குறிப்புணர்த்தும். தொன்மையென்பது பழமை யாகிய குறிப்புணர்த்தும். இவையெல்லாம் அன்ன பிறவுங் கிளத்தவல்ல வென்பதனாற்கொள்க. பிறவுமன்ன. (௪௦௦)

## உரியியல்

# ந-கூஎ. இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வட.சொல்லென் றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே[1].

கிளவியாக்கமுதலாக உரியிய விறுதியாகக் கிடந்த ஓத்துக்களுள் உணர்த்துதற் கிடமின்மையான் உணர்த்தப்படாது எஞ்சி நின்ற சொல்லிலக் கணமெல்லாந் தொகுத்துணர்த்திய வெடுத்துக்கொண்டார். அதனான் இவ் வோத்து எச்சவியலென்னும் பெயர்த்தாயிற்று.

'கண்டீரென்ரு' (சொல்-சஉடு.) எனவும், 'செய்யா யென்னுமுன்னிலை வினைச்சொல்' (சொல்-சடும்) எனவும், 'உரிச்சொன் மருங்கினும்' (சொல்-சடுச.) எனவும், 'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி' (சொல்-சசுக.) எனவும், இவை முதலாகிய சூத்திரங்களா னுணர்த்தப்பட்ட அசைநிலையும் வினைச்சொல் லிலக்கணமும் வழுவமைதியும் அவ்வோத்துக்களு ளுணர்த்தாது ஈண்டுணர்த்திய தென்னையோ வெனின்:—அதற்குக் காரணம் அவ்வச்சூத்திர முறைக்கும்வழிச் சொல்லுதும்.

பலபொருட்டொகுதிக்கு ஒன்றனுற்பெயர் கொடுக்குங்கால் தலைமையும் பன்மையும்பற்றிக் கொடுப்பினல்லது பிறிதாறின்மையானும், தலைமையும் பன்மையும் எச்சத்திற்கின்மையானும், பத்துவகையெச்சம் ஈண்டுணர்த்தலான் எச்சவியலாயிற்றென்றல் பொருந்தாமை யுணர்க.

1 செய்யுளீட்டச் சொல் நான்கு:—தொல்காப்பியர் காலத்தில் தமிழ்ச் சொற்கள் இலக்கண முறையிற் போன்றே சொற்பிறப்பியல் முறையிலும் நான்காக வகுக்கப் பட்டன. முதலாவது தன்சொல் அயற்சொல் என்கிற முறையில் தென்சொல் வட சொல் என்ற பாகுபாடும், பின்பு தன் சொற்குள் செந்தமிழ் கொடுந்தமிழ் என்கிற முறையில் நாட்டுச்சொல் திசைச்சொல் என்ற பாகுபாடும், பின்பு நாட்டுச்சொற் கள் இயல்பும் திரிவும்பற்றி இயற்சொல் திரிசொல் என்ற பாகுபாடும் தோன்ற, இயற் சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என நான்கமைந்தன.

ஆங்கிலத்தில் சொற்களை Primitives, drivatives என இரண்டாய்ப் பகுப்பதாலும்: "திரிபின்றி இயல்பாகிய சொல்லாகலின் இயற்சொல்லாயிற்று" என்றும், "திரிசொல் லது திரிவாவது உறுப்புத் திரிதலும் முழுவதுந் திரிதலுமென இருவகைத்து. கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத் திரிந்தன. விலங்கல், விண்டு என்பன முழுவதுந் திரிந் தன". என்றும் சேனாவரையரும் பிறரும் கூறுவதாலும்; இயற்சொல்லையுந் திரி சொல்லையும் முறையே எண்சொல் அருஞ்சொல் என்று கொள்ளாமல், இயல்பான சொல் திரிக்கப்பட்ட சொல் என்று கொள்வதே பொருத்தமாம்.

தெலுங்கு கன்னடம் முதலிய திராவிடமொழிகள் முற்காலத்தில் கொடுந்தமிழா யிருந்தமையின், அவற்றின் சொற்கள் திசைச் சொற்கள் எனப்பட்டன. இன்று அம் மொழிகள் ஆரியக்கலப்பால் வேற்று மொழியாய் வழங்குகின்றமையின், வேற்று மொழிச் சொற்களையெல்லாம் திசைச்சொல்லெனக் கூறுவது தவறாகும். முற்காலத் தில் திசைச் சொல்லாகக் காட்டப்பட்ட கொடுந்தமிழ்ச் சொற்களே இன்றுந் திசைச் சொல்லாகும்.

வடமொழி யொன்றே முற்காலத்தில் தமிழகத்து வழங்கிய அயன்மொழி. அதனால் அதன் சொல் அம்மொழிப் பெயராலேயே வடசொல்லெனப்பட்டது. அது போல் இதுபோது தமிழில் வழங்கும் பிறமொழிச் சொற்களும் ஆங்கிலச்சொல் போர்த்துக்கீசியச்சொல் என அவ்வம்மொழிப் பெயராலேயே அழைக்கப்படல் வேண்டும்.

# சொல்லதிகாரம்

## ௧௭௱.

செய்யுட்குரிய சொல்லும், அவற்றதிலக்கணமும், அவற்றாற் செய்யுள் செய்வழிப் படும் விகாரமும், செய்யுட் பொருள்கோளும், எடுத்துக் கோட்க ணுணர்த்துகின்றார்.

இ - ள்: இயற்சொல்லும், திரி சொல்லும், திசைச்சொல் லும், வடசொல்லும் என அந்நான்கே செய்யுளீட்டுதற்குரிய சொல்லாவன ; எ - று.

இயற்சொல்லானுஞ் செய்யுட்சொல்லாகிய திரிசொல்லானுமேயன்றித் திசைச்சொல்லும் வடசொல்லும் இடைவிராய்ச் சான்றோர் செய்யுள் செய்யு மாறு கண்டு வினைப்பாடைச்சொல்லுஞ் செய்யுட்குரியவோவென் றையுற்றார்க்கு, இந்நான்கு சொல்லுமே செய்யுட் குரியன: பிறபாடைச்சொல் உரியவல்ல வென்று வரையறுத்தவாறு.

# செய்யுள் செய்யலாவது ஒருபொருண்மேற் பலசொற் கொணர்ந்தீட்டலாகலான், ஈட்டலென்றார்.

பெயர்வினையிடையுரி யென்பன இயற்சொற் பாகுபாடாகலான், இயற் சொல் அந்நான்கு பாகுபாட்டானுஞ் செய்யுட்குரித்தாம். திரிசொற் பெயரா யல்லது வாரா. என்மனா ரென்பதனை வினைத்திரிசொல் என்பாருமுளர். அஃது 'என்றிசினோர்' 'பெறலருங்குரைத்து' (புறம்-ரு.) என்பனபோலச் செய்யுண்முடிபு பெற்று நின்றதென்றலே பொருத்தமுடைத்து. இல்லென்னு மிடைச்சொல், இல்லவென்றானும் இல்லையென்றானுந் திரிந்து நின்றவழி அவை வழக்கிற்குமுரியவாகலின், திரிசொல்லெனப்படாது. 'கடுங்கால்' என்புழிக் கடியென்னு முரிச்சொல், 'பெயரினும் வினையினு மெய்தடுமாறி' (சொல்-உ.கஎ.) என்பதனாற் பண்புப்பெயராய்ப் பெயரொடு தொக்கு வழக்கி னுட் பயின்று வருதலால், திரிசொல் லெனப்படாது. திசைச்சொல்லுள் வினைச் சொல்லுமுளவேனும், செய்யுட்குரித்தாய் வருவது பெயர்ச்சொல் லேயாம். வடசொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட் குரியவாய் வாரா. இவ் வாறுதல் சான்றோர்செய்யுள் நோக்கிக் கண்டுகொள்க. (க)

# ௩௯௮. அவற்றுள்

இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்குஞ் சொல்லே.

இ - ள் : அந்நான்கனுள், இயற்சொல்லென்று சொல்லப்பட்ட சொற்றாம், செந்தமிழ்நிலத்து வழக்காதற்குப் பொருந்திக் கொடுந்தமிழ் நிலத்துந் தம்பொருள் வழுவாமலுணர்த்துஞ் சொல்லாம் ; எ - று.

அவையாவன நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், தயிர், மக்கள், மா, தெங்கு, கமுகு என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ்நிலமாவன வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் றெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்.

## ௬௰௯

## தொல்காப்பியம்

[எச்ச

திரிபின்றி இயல்பாகிய சொல்லாகலின் இயற்சொல்லாயிற்று. கொடுந் தமிழ் நிலத்திற்கும்[1] பொதுவாகலின் இயற்சொல்லாயிற் றெனினு மமையும். நீரென்பது ஆரியச்சிதைவாயினும் அப்பொருட்கு அதுவே சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ்நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லா யிற்று. பிறவு மிவ்வாறு வருவன இயற்சொல்லாகக் கொள்க.

தா மென்பது கட்டுரைச்சுவைபட நின்றது. (உ)

## திரிசொல்

நடசுசு. ஒரு பொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியு
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

இ - ள்: ஒருபொருள் குறித்து வரும் பல சொல்லும் பலபொருள் குறித்து வரும்

ஒருசொல்லுமென இரு வகைப்படுந் திரிசொல்; எ - று.

வெற்பு, விலங்கல், விண்டு என்பன ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி. எகின மென்பது அன்னமும் கவரிமாவும் புளிமாவும் நாயு மூணர்த்த லானும், உந்தி யென்பது யாழ்ப்பத்தலுறுப்பும் கொப்பூழும் தேர்த்தட்டும் கான்யாறு முணர்த்தலானும், இவை வேறுபொருள் குறித்த ஒருசொல்.

திரிசொல்லது திரிவாவது உறுப்புத் திரிதலும் முழுவதுந் திரிதலுமென இருவகைத்து. கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத் திரிந்தன. விலங்கல், விண்டு என்பன முழுவதுந் திரிந்தன. முழுவதுந் திரிந்தனவற்றைக் கட்டிய வழக்கென்பாரு முளர். அவை கட்டிய சொல்லாமாயிற் செய்யுள் வழக்காமா றில்லை; அதனான் அவையுந் திரிவெனல் வேண்டுமென்பது.

---

1 சேனாவரையர் செந்தமிழ் நிலமாகக் கூறியவிடம் பெரும்பாலும் பாண்டி நாட்டிற்கப்பாற்பட்டதாய்ச் சோழநாட்டின் தென் பகுதியாயிருத்தலின், நல்லூரும், பாண்டிநாடே தமிழ் நாடென்றும் பாண்டியனே தமிழ் நாடனென்றும் நிகண்டுகள் கூறுதற்பவும், "வீயாத் தமிழுடையான்...பாண்டியன்" என்றொரு பழம்புலவரும், "பாண்டிய நின்னாட்டுடைத்து நல்லதமிழ்" என்று ஒளவையாரும், "தமிழ் நிலைபெற்ற ...மதுரை" என்று நக்கீரரும், "கூடலி னாய்ந்த வொண்டீந்தமிழ்" என்று மாணிக்கவாசகரும் பாடியிருப்பவும், முச்சங்கங்களையும் முறையே இரீஇ முத்தமிழ் வளர்த்தவர் பாண்டியரேயே யிருப்பவும், இவற்றை எட்டுணையும் நோக்காது மதுரைக்கு வடக்கே செந்தமிழ் நாட்டைச் சேனாவரையர் குறித்தது வியப்பிற்கிடமானது.

"செந்தமிழ் நாடாவது:—வையையாற்றின் வடக்கும்...மருவூரின் மேற்கும் என்ப, இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணங் காணாமையானும், வையையாற்றின் தெற்காகிய கொற்கையும், கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும், மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ் திரிநிலமாதல் வேண்டுமாதலானும், அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு:—

